உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

"எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.


தொகுதி-௩௮.] விஷு ஆவணி மீ [பகுதி-௧௰.
Vol. 38. August—September 1941. No. 10.


உள்ளுறை.




பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா—8.

வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.

1941.

Printed by Srimathu R. Shanmuga Rajeswara Naganatha Sethupathy Avl., and
Published by Thiru. Narayana Iyengar at the Tamil Sangam Power Press,
No. 54, Tamil Sangam Road, Madura.

# ஒரு வேண்டுகோள்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதமொருமுறை வெளிவரும் இச்செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிடுமாறு பொருளுரைகளும் மதிப்புரைவேண்டிப் புத்தகம் முதலியனவும் அனுப்புவோர் அவற்றைப் பத்திராசிரியர், செந்தமிழ், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும்,

செந்தமிழில் வெளியிடுமாறு அனுப்பும் விளம்பரங்களையும், பாண்டியன்புத்தகசாலைக்கு நன்கொடையாக அனுப்பும் புத்தகம் முதலியவைகளையும், செந்தமிழ் செந்தமிழ்ப்பிரசுரங்கள் தமிழ்ச்சங்கப் பிரசுரங்கள் சங்கக்கலாசாலை சங்கப்பரீக்ஷைகள் முதலியவை சப்பந்தமாக அனுப்பும் கடிதங்கள் மணியார்டர்கள் முதலியவற்றையும், இன்னும் இச்சங்கசம்பந்தமாயறியவிரும்பியெழுதும் பிறவற்றையும மானேஜர், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும் அனுப்புமாறு இதன்மூலம் கேட்டுக்கொள்ளலாயிற்று.

லக்ஷ்மீநாராயணையர்,
மானேஜர்

---

## மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

### I. சங்கப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| 3. | *யாப்பணியிலக்கணங்கள் ... ... ... | | | |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | 3 | 0 | 0 |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... ... | 4 | 0 | 0 |
| 7. | *தோத்திரத்திரட்டு ... ... ... | | | |
| 8. | *தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | *ஷை இரண்டாம்பாகம ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம்பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 9. | *அபிதானசிந்தாமணி ... ... ... | | | |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் (நச். உரை முதலிய) ... | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 6 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 | 0 |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா ... ... | 0 | 6 | 0 |
| 14. | *தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ... | | | |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... | 0 | 4 | 0 |
| 16. | ஸ்ரீகிருஷ்ணசரித்திரவிமர்சம் ... ... | 1 | 4 | 0 |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

---

உ

கடவுள் துணை.


# செந்தமிழ்.

தொகுதி-ருஅ.] விஷு ஹு ஆவணிமீ [பகுதி-க0.

Vol. 38. August—September 1941. No. 10.


## கம்பராமாயணசாரம்


[ஸ்ரீ. ராவ்சாகிப் வெ. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள், G.B.V.C.]



சாருஉ-ஆம் பக்கத் தொடர்ச்சி.


### படைக்காட்சிப்படலம்

இராவணன் ஆணைப்படி பல இடங்களிலுமிருந்து இலங்கைக்கு வந்த அரக்கப்பெரும்படையை அவன் பார்வையிடுதலைக் கூறுவது.

#### பலதிக்குகளிலும் பாதாளத்திலும் இருந்த இராக்கதசேனைகள் இலங்கைத்தீவுக்கு வருதல்

[இராவணன் ஆணைப்படி பணியாளர், இந்திரசித்தின் உடலைத் தயிலத்தோணியில் இட்டார்கள். அவன் கட்டளையிட்டபடி எல்லாத்திசைகளிலும் உள்ள இராக்கதசேனைகளையும் கிரட்டிவரச் சென்றிருந்த தூதர், திரும்பி அவனிடம் வந்து, 'சேனைகளெல்லாம் வந்துவிட்டன. அவைகளுக்கு இலங்கை இடம்போதாது' என்றனர். அந்தச் சேனைகள் நடந்துவருதலாலெழுந்த தூள், தேவலோகத்தின் மீது திண்ணமாகப்படிந்ததனுல், தரைமீது தாள்படியாது சஞ்சரிக்கும் வர்னவர் (தூள் திரண்டதனுலாகிய) தரையில் தாள்பட நடப்பாரானுர்கள். அந்தப் படைத்திரள், யுகாந்தகால மேகசாலம் போல, இலங்கைநோக்கி வந்தது. அந்தப் படைவீரரைப்போல,

மேகங்கள் இருளமாட்டா. அவர்கள் வாள்மின்னலுக்கெதிராக, மேகமின்னல்கள் மின்னமாட்டா. முரசுமுழக்கத்துக்கெதிராக இடிகள் இடிக்கமாட்டா. (இவ்வாறாக மேகம் ஒப்பாகமாட்டாத) அந்தச் சேனைகள், பூமி யிடம்போதாமையால், கடல்மீதும் நடந்து வந்தன. அந்தச் சேனைகளின்காலால் மிதிக்கப்பட்ட கடலை அந்தச் சேனைகளுக்கு உவமானமாகக் கூறலாமோ? (பூலோகம் தவிர, இந்திரலோகம் பிரமலோகம் முதலிய) உலகங்கள் ஒன்றுக்குமே லொன்றாக உள்ளவை, (இந்தச் சேனைகளைத் தாங்கமுடியாதென்று) அஞ்சி ஒதுங்கிப்போயின போன்றன.

### அந்தச் சேனைகள் இலங்கைநகருட் புகுதல்

(அடிப்படை பாதாளத்தை எட்டச் சிகரம்) ஆகாயத்தை முட்டி, மேருநேரும் இலங்கைமதிற்கோபுரங்களின் வாயில்கள் வழியாக அந்தச் சேனைகள், நகருக்குள்ளே புகத்தொடங்கிய போது வாயில்கள்வழியாகச் சென்றால் காலதாமதமாமென்று மதில்மேலேறியும் சென்றன.

### அந்தச்சேனைகளை இராவணன் காணுதல்

அப்போது இராவணன், ஏழுகடலையும் ஒருசேரப் பார்த்த லான அசாத்தியச்செயலைச் செய்யமுயலும் அறிவிலிபோல, அந்த மாபெரும் படைத்திரள்முழுவதையும் ஒருபார்வையிற் பார்க்க விரும்பினான்.

### தூதுவர், இன்னின்னார் இன்னின்ன இடத்தினரென விண்ணப்பித்தல்

தூதுவர்கள், 'வேத வேதாந்தங் கூறும் பொருளினை விரிக்கின் றார்போல்'* அந்தப் பெரும்படைப் பிரிவுகளை விவரிப்பாராய், ஒவ்வொரு படைத்தொகுதியையும் சுட்டிக்காட்டி, 'இவர்கள், அசுரர் செய்த வேள்வியிற் பிறந்து தேவரையெல்லாம் மோகத்துள் முழுகி அழியச்செய்த மாயாசிரேட்டரான சாகத்தீவினர். இவர்கள், தேவர்கள் செல்வத்தையும் இருப்பிடத்தையும் இழக்கச்செய்த வெற்றியே வடிவெடுத்தாற்போன்ற குசைத்தீவினர். இவர்கள், முன்னொருகாலத்தில் அமராவதிநகரத்தை அழித்த இலவத்

* இப்படலம்-சூ,

தீவினர். இவர்கள், வானவர்க்கு வாழிடமான வடமேருமலையைக் கடலிலிடத்தொடங்க, வேண்டாமென அந்தத் தேவர்கள் இரந்து வேண்டத் தாம் செய்யத்தொடங்கியதைச் செய்யாதுவிட்ட கிரௌஞ்சத்தீவினர். இவர்கள்,(ஐம்புலன்களை வென்று ஜிதேந்திரியனெனப் பேர்பெற்ற) சுக்கிராச்சாரி, (அந்தத்) தன்மை மாறிக் (காமபரவசனாய்) ஓர் இராக்கதமாதைச் சேர்ந்ததனாற் பிறந்தவரும் பத்துக்கோடி தொகையினரும் பாற்கடல்வற்றக் குடித்தவருமான பவளக்குன்றவாசிகள். இருளும் விடமும் போல மிகவும் கறுத்த நிறமுடைய இந்த எண்ணிக்கையில்லாதவர்கள், கந்தமாதன பருவதவாணர். இவர்கள், மலயமலையென்ற பொதியமலையிற் பிறந்து சாகத்தீவில் வாழ்பவர். சம்மட்டியும் சூலமும் வில்லும் தாங்கிய இவர்கள், புட்கரத்தீவினர். இவர்கள், தங்கள் தாய்சொற்படி எமனை வலிகெடச்செய்து ஏழுலகுக்கும் அப்பாலுள்ள சக்கரவாளகிரியிற் சிறைப்படுத்திப் பிரமன் வேண்டச் சிறைவிடுத்த இறலித்தீவினர். இவர்கள், "நீங்கள் வாழ்வதற்குப் பூமி விசாலம் போதாது. பாதாளத்தில் வாழுங்கள்" எனப் பிரமன் கூறியதற்கிசைந்து பாதாளத்தில் வாழ்பவர்கள். இவர்கள், நீர்வேட்கையைத் தீர்த்தற்கு இரத்தத்தைக் குடிப்பவர்; இரத்தம் கிடைக்கவில்லையானால், ஏழுகடலையும் குடித்துத் தாகசாந்திசெய்பவர்; ஒவ்வொருவரும் ஏழுமலைகளை ஒருசேர எடுக்கவல்ல வலிமையுடையவர்; தென்மேற்றிசைப்பாலகனான நிருதிகுலத்தினர். இவர்கள், பூமிதேவியை அணைந்த வராகமூர்த்தியை அந்தத் தேவி விரும்பிப் பார்த்த பார்வையினின்று பிறந்தவர்கள். இவர்கள், சிவபெருமான், காளிதேவியோடு நடனப்போராட்டஞ்செய்து வெல்லமுடியாமையை உணர்ந்தபோது, (ஒருகாலை மேலே தூக்கி ஆடும் நடனமாகிய) ஊர்த்துவதாண்டவம் ஆட, மற்றெல்லா நடனவகைகளிலும் வென்ற அவள், அந்த நடனம்செய்வதற்கு நாணித் தலைகவிழ்ந்து நடனவல்லபக்குறை காரணமாகவன்றி, நாணம் காரணமாகத் தோல்வியடைந்தபோது, அவள் அந்த வஞ்சவெற்றிபற்றி வருந்திக் கோபிக்க, அந்தக் கோபத்தினின்று பிறந்தவர்கள். (ஒரு கரியமலையில் இரண்டுகுகைகளில் எரியும் தீபங்கள்போன்ற கோபத்) தீயுடைய குழிந்த கண்ணினரான இவர்கள்,

பாவந் தோன்றிய காலமே தோன்றிய பழையோர்
சோவந் தோன்றிடில் தாயையும் உயிர் உண்ணும் கொடியோர்

இவர்கள், (உகாந்தகாலத்திலே) உலகங்களை யெரித்தழிக்கும் சிவனுடைய நெற்றிக்கண்ணிற் பிறந்தவர்கள். இவர்கள், சிவன் எமனை உதைத்தபோது, எமனுடையநெஞ்சு கக்கிய இரத்தக்கடலிற் பிறந்தவர். சூலபாணியராய்நிற்கின்ற இவர்கள், பாற்கடல் கடையப்பட்டகாலத்தில் அமிழ்தம் தோன்றுதற்குமுன் தோன்றிய ஆலகாலவிடத்துக்கும் முன்னதாக(க் கொடுமையில் ஆலகாலத்தின் அண்ணன்மாரென)த் தோன்றிய, போர்வல்ல இராக்கதர்;* வடவாமுகாக்கினியிலே வாசுகிப்பாம்பு விடத்தைக் கக்க, அந்த விடங்கலந்த தீயிலே (கொல்லுந்தன்மையில் ஒற்றுமையுடைய குளிர்விடமும் சுடுதீயும் கலந்தாற்போலப்) பிறந்தவர்கள். இவர்கள், பிரமன் சாரதியாகப் பூமித்தேரைச்செலுத்த, அத்தேர்மீதிருந்து, பரமன் சுட்டெரித்த திரிபுரத்திலே பிறந்தவர்கள். இவர்களெல்லாரும் எத்தனையரென்று வாயினுற் சொல்லமுடியாது; மனத்தினுல் எண்ணவுமுடியாது. இவர்களெல்லாருடைய வஞ்சனைகளும் வரங்களும் மாதவங்களும் வரம்பில்லாதவை. இவர்களுள் ஒருவரே வானரரனைவரையும் மனிதரிருவரையும் ஒருகையாற்பற்றி (மறுகையால்) அறைந்துகொல்லவல்லவரென்றுல் வேறு கூறுதற்கு யாது இருக்கிறது! இந்தப் படைத்தொகுதிகளின் மொத்தத் தொகை, ஆயிரம்வெள்ளமென்பார் அறிவிலிகளே; அத்தொகுதிகளின் உண்மைத்தொகையைக் குறித்தற்குக் கணிதநூலிற் குறிக்கப்பட்டுள்ள, உச்சஎண், குறைந்ததாயிருக்கின்றது’ என்றுர்கள் (தூதர்கள்).

### இராவணன், படைத்தலைவர்களை வரவேற்றல்

இவ்வாறு தூதர் சொல்லக்கேட்ட இராவணன், அவர்களை, அந்தப் படைகளின் தலைவர்களை அழைத்துவரும்படி ஆஞ்ஞாபித்தான். அவன் ஆணைப்படிவந்த படைத்தலைவர்கள், அவன்பாதங்களில் மலர்சொரிந்து விழுந்து வணங்கினுர்கள். அவன், ‘உங்கள் வரவு நல்வரவாகுக. உங்கள் மனைவியரும் மக்களும் திடமாயிருக்

* ஆலகாலத்தின் அமிழ்தின்முன் பிறந்தபோர் அரக்கர்.

கிறார்களா?' என்று சேமம் விசாரித்தான். அவர்கள், 'நீ வலியனு யிருக்கின்றாய். (ஆதலால் எங்களுக்கு எக்குறையும் இல்லை.) நாங் கள்செய்த தவத்தினால் பெருவரங்கள் பெற்றிருக்கின்றோம். எங்க ளுக்கு வேண்டிய யாவற்றையும் எளிதாக முடித்திருக்கின்றோம். தேவரைச் செயித்துவிட்டோம். பகையோ, வேறில்லை. எங்க ளுக்கு(ப் பெறுதற்கோ, செய்தற்கோ) அரியது யாதிருக்கின்றது?'

## இராவணன், சீதைகாரணமாக நிகழ்ந்தவைகளைச் செப்புதல்

(அந்தப் படைத்தலைவர்கள், 'எங்கள் நிலைமைகள் கிடக்க) உன் பக்கத்திலுள்ள மாதர் மைந்தர்களுள்ளே கலங்காதிருக்கின்றவ ரைக் காண்கின்றிலேம். நீயும் வருந்தியுள்ளாய். யாது காரணம்? கூறியருள்' என்றார்கள். அவன், சீதைகாதல்காரணமாக நிகழ்ந்த வைகளனைத்தையும் சொன்னான்.

## சேனாபதிகள் சிரித்துக் கூறுதல்

அதைக்கேட்ட சேனாபதிகள், இராவணனைநோக்கி, 'கொதிக் கின்ற கொடியகோபமுடைய கும்பகருணனையும் இந்திரசித்தையும் இராக்கதர்கூட்டம் முழுவதையும் அம்புகொண்டு வென்றவர் (அற்பமனிதரே; அவர்களும் பெருந்தொகையினரல்லர்; இரண்டே யிரண்டு) சின்ன மனிதரே. அவர்கள் படையோ, (மனிதப்படையு மன்று) குரங்குப்படையே!! நமது வல்லமை நன்றாயிருக்கின்றது!!!' என்றுகூறிச் சிரித்தார்கள்.* 'எங்களை அழைத்தது, இந்தப் பூமி யை ஆதிசேடனுடைய உச்சியிலிருந்து அப்பாலெடுத்தற்கன்று, (சப்தகுலபருவதங்களென்ற) ஏழுமலைகளையும் வேரோடு பறித் தெடுத்தற்கன்று, கடலைக் கையால் வாரிக் குடித்தற்கன்று, (இந்த

---

* 'கும்ப கன்னனொ டிந்திர சித்தையும் குலத்தின்
வெம்பு வெஞ்சினத் தரக்கர்தங் குழுவையும் வென்றார்
அம்பி னாற்சிறு மனிதரே! நன்று!! நம் ஆற்றல்
நம்ப! சேனையும் வானர மே!!!' என நக்கார்.

குலத்தின் வெம்பு வெம் சினத்து அரக்கர்தம் குழு - (வீர) குலத்தில் (பிறந்த) வெம்புகின்ற கொடுங்கோபமுடைய இராக்கதருடைய கூட்டம். ஆற்றல் - வலிமை - ஆண்மை. நம்ப - நம்பனே. நம்பன் - நம்பி - ஆண் மக்களிற் சிறந்தோன். நகுதல் - சிரித்தல். நக்கார் - சிரித்தார்.

அரும்பெருஞ்செயல்களில் எதனையும் செய்தற்காகவல்லாமல்,) இலையையும் மலரையும் கோதித்தின்னும் குரங்குகளின்மேல் ஏவுதற்கோ'* என்றுகூறிக் கைகொட்டி இடியிடித்தாற்போலப் பேரோசை பிறக்கச் சிரித்தார்கள். அப்போது, புட்கரத்தீவுக்கு அரசனான வன்னியென்பவன், அவர்களை(த் திரிலோகாதிபதியான இராவணேசுரனெதிரே இவ்வாறு சிரியாதீர்களென்று சைகைசெய்வானாய்)க் கையமர்த்தி, இராவணனைநோக்கி, 'அந்த மானுடருடைய வலிமைதான் எப்படிப்பட்டது?' என்று வினவினான்.

### மாலியவான் எதிரிகள் வலிமையை எடுத்துக் கூறுதல்

மாலியவான், வன்னியின் வினவுக்கு மறுமொழி கூறுவானாய்(ச் 'சிவனுடைய அட்டமூர்த்தங்களை எட்டுத்திக்கிலும் சென்று தாபித்துப் பூசித்தற்காகத் தினமும்) ஏழுகடலையும் கடப்பவனாயிருந்த வாலியின் வயிரமார்பைப் பிளந்து உயிரை வாங்கியது, ஒரே ஒரு ராமபாணந்தான். அந்த அம்பினால் மாரீசனும் விராதனும் மாய்ந்தனர்; கர தூடண திரிசிரர்கள் மூவரும் கடல்கள்போன்ற பெருஞ்சேனைகளோடு ஒருநாழிகைப்பொழுதிலே உயிரிழந்தார்கள்.

(வாலி முதலியோர் இராமனாற்கொல்லப்பட்டதை, உம்மிடம் வந்து சொல்லுவாரில்லாமைபால் தெரிந்திலீரானாலும், நீர் இருந்த இடத்திலிருந்தே இராமன் வலிமையைத் தெரிந்திருக்கச் செய்யத்தக்க ஏதுக்கள் இருந்திருக்கின்றனவே? அந்த ஏதுக்களிருந்தும், நீர் (எவ்வளவோ தூரம் கடந்து) இங்கேவந்து ('எதிரிவலிமை எப்படிப்பட்டது?' என்று) ஏன் வினவினீர்? (இராமனம்பால்) கடல் (எவ்வளவுதூரத்துள்ளாரும் காணும்படி சுவாலைவீசி) எரிந்தது, உங்கள்கண்ணுக்குத் தெரிந்ததில்லையோ? (சீதையின் கன்னியா

---

* உலகைச் சேடன்றன் உச்சியின் றெடுக்கவன் றேரேழ்
மலையை வேரொடும் வாங்கவன் றங்கையால் வாரி
அலைகொள் வேலையைக் குடிக்கவன் றழைத்தது மலரோ
டிலைகள் கோதுமக் குரங்கின்மேல் ஏவக்கொல்' எம்மை?

வேலை - கடல். 'வேலையை அங்கையால் வாரிக்குடிக்க' எனவும், 'எம்மை அழைத்தது' எனவும் இயையும்.

சுல்கம் - பரிசம் - ஆக வைத்திருந்த) சிவன்வில்லை இராமன் ஒடித்த அந்தக்காலத்தில் (உலகெல்லாம் கேட்கும்படி) முழங்கிய (அந்த வில் முறிந்த) ஓசை உங்கள்காதுக்குள்ளே புகவில்லையோ ?* (அந்த இராமனும் அவன் தம்பி இலக்குமணனுமாக) இருவரே எய்த அம்புகள், இலங்கையிலிருந்த ஈரைஞ்ஞூறுவெள்ளஞ்சேனையையும் எமபுரம் நிறையச்செய்துவிட்டன.

கும்பகருணனும், இந்திரசித்து முதலிய இராவணகுமாரரும் பிறரும் இராமலக்குமணரால் மடிந்தார்கள். இன்றுவரை இறவாது எஞ்சியிருப்பவர், யானும் இங்குள்ள இவர்களுமே. (இனிக் குரங்குகளின் வலிமையைக் கூறுகின்றேன்.) ஒரு குரங்குவந்து இலங்கையைக் கொளுத்தித் தீக்கிரையாக்கி, (இராவணேசுரன்மகன்) அட்சகுமாரனைத் தரையோடு தரையாக அரைத்துத் தூதுகூறிக் கரிய இராட்சசசேனைக்கடலைக் கடந்து (-கொன்றொழித்து) பெரிய கடலையும் கடந்துபோனது.† (குரங்குகளென்று இகழ்ந்தீர்களே, அந்தக்) குரங்குகள் அலைகடலில் மலைகளைக்கொண்டு அணைகட்டியதைக் கண்டிலீரோ! குரங்குச்சேனை எழுபதுவெள்ளங்கொண்டது. அதில் ஒருகுரங்கு ஒரு நொடிக்குள்ளே மேருவைத்தாண்டிச்

---

* இங்கு வந்துநீர் வினயதென்? எறிதிரைப் பரவை
அங்கு வெந்தில தோ?சிறி தறிந்ததும் இலிரோ?
கங்கை சூடிதன் கடுஞ்சிலை ஒடித்தஅக் காலம்
உங்கள் வான்செவி புகுந்தில தோ?முழங் கோதை.

வினயது - வினவியது - கேட்டது. எறி திரைப் பரவை - வீசும் அலைகளையுடைய கடல். இலிரோ - இல்லீரோ. அறிந்தது இலிரோ - அறிந்ததில்லையோ. கங்கைசூடி - சிவன். சிலை - வில். வான்செவி - பெரிய காது. ஓதை - ஓசை.

† ஒருகு ரங்குவந் திலங்கையை மலங்கெரி யூட்டித்
திருகு வெஞ்சினத் தக்கனை நிலத்தொடுந் தேய்த்துப்
பொருது தூதுரைத் தேகிய தரக்கியர் புலம்பக்
கருது சேனையாங் கடலுமா கடலையுங் கடந்து.

மலங்கு எரி ஊட்டி - கலங்கும் (படியான) தீ மூட்டி. பொருது - போர் செய்து.

சஞ்சீவிமருந்தைக் கொண்டுவந்திட்டது. இந்நிகழ்ச்சிகளெல்லாம், உயர்வொப்பற்றுச் சிறந்த கற்புடைய சீதையை ஏதுவாகக்கொண்டு விதிவிளைத்த செயல்கள்' என்று கூறினான் (மாலியவான்).

சேனாபதிகள் எதிரிகளை வென்றுவருவேமென்று கூறுதல்

அதுகேட்ட வன்னி, இராவணனை நோக்கி, 'இவர்களெல்லாரும் இறக்காமல் தடுத்தற்கு நீ ஏன் போர்புரிந்தாயில்லை?' என, இராவணன், (முதனாட்போரில் தான் தோல்வியுற்றதைச் சொல்லாமல்,) 'அற்பமனிதரோடும் குரங்குகளோடும் பொருதற்கு நாணிப் பொருதிலேன்' என்றான். வன்னி, 'அப்படியானால், போர்செய்தல் எங்கள் கடனாம்' என்று கூறி, '(இந்த விருத்தன் கருத்துப்படி) சீதையை விட்டுவிடுதல், முன்பு செய்யத்தக்கது; இப்போது செய்தால் இழிவாம். (சீதையை முன்பு விட்டிருந்தால், இந்திரசித்தை இழந்திருக்கமாட்டோமே. ஆ! வீரரன்பைப் பெற்றும் அவருக்குத் தன் அன்பை அளித்தும் வீரத்தோடு) அன்புக்கிடமாயிருந்த இந்திரசித்தை இனி எக்காலத்திலே காண்போம்!* இப்போது சீதையை விட்டோமானாலும், இறந்துபோன வீரரைத் திரும்பப்பெறமாட்டோம்; (பயந்து விட்டோமென்ற) பழியையே பெறுவோம். ஆதலால், இப்போது செய்யத்தக்கது பகைவர்களைக் குலத்தோடு தொலைக்கும்படி போர்புரிவதே' என்று எழுந்தான். அவனோடு மற்றைய இராக்கதசேனாபதிகளும் எழுந்து, 'நீ (இராவணன்) இங்கேயிருப்பாயாக; நாங்கள் போய் எதிரிகளைக் கொன்று வெற்றிபெற்றுத் திரும்பிவருவோம்' என்று கூறினார்கள்.]

படைக்காட்சிப்படலம் முற்றிற்று.

[தொடரும்.]

---

* காதல் இந்திர சித்தையாம் யாண்டினிக் காண்கும்.

காதல் - அன்பு (உடைய). யாண்டு - எப்போது. காண்கும் - காண்போம்.

உ

# மெய்ப்பாடு

[ஸ்ரீ. சி. கணேசையரவர்கள்.]

'மெய்ப்பாடாவது: உலகத்தாருள்ளநிகழ்ச்சி ஆண்டுநிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதொருவழியால் வெளிப்படுதல்' என்றும், 'மெய்ப்பாடு - பொருட்பாடு' என்றும் கூறுவர் பேராசிரியர். பொருள் - உள்ளநிகழ்ச்சி (சுவைக்குறிப்பு). பாடு - வெளிப்படுதல். படுதல் - தோன்றல் - வெளிப்படுதல். உலகத்தாருள்ளநிகழ்ச்சி என்றது - உலகத்திலுள்ளானொருவன் ஒருபொருளைத் தன் பொறியால் உணர்ந்தவிடத்து அப்பொருள்காரணமாக அவனுள்ளத்து நிகழும் நிகழ்ச்சி (சுவைக்குறிப்பு) என்றபடி. புலப்படுவதொருவழி என்றது சத்துவத்தினை. ஒருவனுள்ளத்தேநிகழ்வது உடம்பின் வேறுபாட்டால் தோன்றுமென்பது,

> "அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
> கடுத்தது காட்டும் முகம்"

என்று தேவர் கூறுதலானும் அறியப்படும்.

இனி இளம்பூரணர்,

> "உய்ப்போன் செய்தது காண்போர்க் கெய்துதன்
> மெய்ப்பா டேன்ப மெய்யுணர்ந் தோரே"

என்று செயிற்றியனர் கூறலின், "அச்சமு(தலியனவு)ற்றான்மாட்டு நிகழும் அச்சம் (முதலியன) அவன்மாட்டுநிகழுஞ் சத்துவத்தினாற் புறப்பட்டுக் காண்போர்க்குப் புலனாந்தன்மை மெய்ப்பாடு" என்றும், 'மெய்யின்கட்பட்டுத் தோன்றலின் மெய்ப்பாடாயிற்று' என்றும் கூறுவர். உய்ப்போன் - அநுபவிப்போன் (சுவைப்போன்) என்றபடி.

> "காதல காத லறியாமை யுய்க்கிற்பின்
> ஏதில வேதிலார் நூல்" (அதி-௬௪-செய்-௧0)

என்னுங் குறளுரையில் 'உய்க்கிற்பின் - அநுபவிக்கவல்லனயின்' என்று பரிமேலழகர் கூறலும் காண்க. உய்த்தல் - செலுத்தல்.

அஃது ஈண்டுச் செலுத்தி அநுபவித்தன்மேனின்றது. "உய்த் தாடித்திரியாதே உள்ளமே" என்பது தேவாரம்.

மெய்ப்பாடு - மெய்க்கட்பட்டு விளங்குந் தோற்றம்' என்பர் வீரசோழியகாரரும்.

சொற்பொருளால் வேறுபடினும் வரைவிலக்கணங்களை உற்று நோக்கும்போது யாவர்கருத்தும் ஒன்றாகும்.

இனி, நாடகநூலார்கூறிய மெய்ப்பாட்டுப்பொருள்கள் முப்பத் திரண்டென்றும், அவை பதினாறும், அப்பதினாறும் எட்டாயும் அடங்குமென்றும் தொல்காப்பியனார் கூறுவர்.

மெய்ப்பாடுகள் முப்பத்திரண்டாவன: சுவைக்கப்படுபொருளும், அதனையுணர்ந்த பொறியுணர்வு மனத்துட்பட்டவழிநிகழும் நகை முதலிய சுவையும், அச்சுவையானாய குறிப்பும், அக்குறிப்புக்கள் தோன்றிய உள்ளங்காரணமாக உடம்பின்கண்வரும் வேறுபா டாதிய சத்துவங்களும் என்னும் நான்கனோடும் மெய்ப்பாடு எட்டை யும் உறழ முப்பத்திரண்டு பொருளாம்.

சுவைப்பொருளாவன: நகைமுதலிய சுவைக்கு முதலாகிய ஆரியர்கூறுந் தமிழும், குருடரும் முடவரும் செல்லுஞ் செலவும் போல்வன.

சுவையாவது: நகைமுதலிய சுவைக்குரிய பொருள்களும் சுவைப்போனுடைய பொறியுணர்ச்சியும் கூடியவழி அவனுள் ளத்து நிகழ்வது. இதுபற்றியே,

"இருவகை நிலத்தி னியல்வது சுவையே"

என்றார் பிறரும். இச்சுவையைக்குறித்துப் பேராசிரியர் உரைக்கு மிடத்து, "இருவகை நிலத்தி னியல்வது சுவையே" என்னுஞ் சூத் திரத்துள் இருநிலமென்பன உய்ப்போன்செயலும் காண்போனறி வும் என்னும் இரண்டிடமும் என்று பொருள்கூறுவார்கருத்தை மறுத்து, இருநிலமென்பன சுவைக்கப்படுபொருளும் சுவைப் போனுணர்வுமென்னும் இரண்டிடமுமே என்று நாட்டியுரைத்த வின் அவருரையையும் விளங்குதற்பொருட்டு ஈண்டுக் காட்டுதும். அது வருமாறு:—

"இனி இருவகைநிலமென்பன உய்ப்போன்செய்தது காண் போற்கெய்துதலன்றேவெனின், சுவையென்பது ஒப்பினுைய பெயராகலான் வேம்பு சுவைத்தவன் அறிந்த கைப்பறிவினை நா வுணர்வினுற்பிறனுணரான், இவன் கைப்புச்சுவைத்தானெனக் கண் ணுணர்வினுன் அறிவதன்றி. அதுபோல, அச்சத்துக்கு ஏதுவாகிய ஒருபொருள்கண்டு அஞ்சி ஓடிவருகின்றுனெருவனை மற்றெருவன் கண்டவழி, இவன் வள்ளெயிற்றரிமா முதலாயின கண்டு அஞ்சினு னென் றறிவதல்லது வள்ளெயிற்றரிமாவினைத் தான் காண்டல் வேண்டுவதன்று. தான் கண்டானுயின் அதுவுஞ் சுவையெனவே படும். ஆகவே, அஞ்சினுனைக்கண்டு நகுதலும் கருணைசெய்தலும் கண்டோற்குப் பிறப்பதன்றி அச்சம் பிறவாதாகலான் உய்ப்போன் செய்தது காண்போனுய்த்த அறிவின்பெற்றியாற் செல்லாதாக லின், இருவகைநிலமெனப்படுவன சுவைப்பொருளும் சுவைத் தோனுமென இருநிலத்தும் நிகழுமென்பதே பொருளாதல் வேண்டுமென்பது." கண்டோர்க்குச் சுவைபிறவாதென்று பேரா சிரியர் மறுத்துக்கூறிய அதனுல் கண்டோர்க்கும் சுவைபிறக்கு மென்று கூத்தநூலாருட் சிலர் கூறுவரென்பது பெறப்படும்.

குறிப்பாவது: உள்ளத்தின்கண் சுவையுணர்வு பிறந்தவழி உண் டாகும் வெறுப்பு, மயக்கம் முதலிய குணங்கள்.

சத்துவமாவன: மெய்ம்மயிர்சிலிர்த்தல், கண்ணீர்வார்தல், நடுங்கல், வியர்த்தல், தேற்றம், களித்தல், விழித்தல், வெதும்பல், சாக்காடு, குரற்சிதைவு என்னும் பத்துமாம். இளம்பூரணர்க்கும் இதுவே கருத்தென்பது, "பேயானும் புலியானும் கண்டானெரு வன் அஞ்சியவழி (அவன்கண்) மயக்கமும் கரப்பும் நடுக்கமும் வியர்ப்புமுளவாகின்றே, அவற்றுள் அச்சத்திற்கேதுவாகிய புலியும் பேயும் சுவைக்கப்படுபொருள். அவற்றைக் கண்டகாலந்தொட்டு நீங்காதுநின்ற அச்சம் சுவை. அதன்கண் மயக்கமும் கரத்தலும் அச்சக்குறிப்பு. நடுக்கமும் வியர்ப்பும் சத்துவம். இவற்றுள் நடுக்க மும் வியர்ப்பும் பிறர்க்கும் புலனுவன என்றுகொள்க. ஏனைய மன நிகழ்ச்சி. பிறவுமன்ன. இவற்றின் விரிவை நாடகநூலிற் காண்க." என்று கூறுதலான் அறியப்படும்.

இங்ஙனம் பேராசிரியரும் இளம்பூரணரும் உள்ளத்துநிகழ் வது சுவையும் குறிப்பும் என்றும், அச்சுவை உடம்பின்வழியாகப் பிறர்க்குப் புலனாவது சத்துவம் என்றும் கூறுதலானே, சுவையும் குறிப்பும் அகத்துநிகழும் மெய்ப்பாடுகள் என்பதும், சத்துவம் புறத்துநிகழும் மெய்ப்பாடு என்பதும் பெறப்படும். இதுபற்றியே,

> "உண்ணிகழ் தன்மை புறம்பொழிந் தோங்க
> எண்மெய்ப் பாட்டி னியல்வது சுவையே"

என்றார் தண்டியாசிரியரும் என்க.

இனித் தொல்காப்பியரும் புறத்துநிகழும் சத்துவத்தையும் அகத்துநிகழும் குறிப்பையும் சுவையுளடக்கி அகத்துநிகழுஞ் சுவைமெய்ப்பாட்டையே கூறினாரென்பது, அவர் பொருளும் சுவையுமாகப் பகுத்துக்கூறும் மெய்ப்பாட்டுச் சிறப்புச்சூத்திரங்க ளாலே யறியப்படும். படவே, அகத்துக்கண் சுவையானே சுவைக் குறிப்பும் அதனாற் சத்துவமாகிய புறத்துநிகழும் மெய்ப்பாடுகளும் தோன்றும் என்பதும், புறத்துநிகழுமெய்ப்பாட்டானே அகத்து நிகழுஞ் சுவை அறியப்படுமென்பதும் பெறப்படும். ஆகவே, ஒருவ னுள்ளத்துநிகழுஞ் சுவையை அறிதற்குக் கருவி அச்சுவையாற் றோன்றும் சத்துவங்களென்பதும், அவற்றை அறிதற்குக் கருவி அறிவோனுடைய கண்ணும் செவியுமென்பதும், சுவைக்குக்காரண மாகிய சுவைக்கப்படுபொருளையறிதற்குக் கருவி சுவைப்போ னுடைய ஐம்பொறிகளென்பதும் அறிந்துகொள்ளப்படுமென்க. சத்துவங்களை அறிதற்குக் கருவி அறிவோனுடைய கண்ணும் செவியுமென்பது,

> "கண்ணினுஞ் செவியினுந் திண்ணிதி னுணரும்
> உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்
> நன்னயப் பொருள்கோ ளெண்ணருங் குரைத்தே."

என்று தொல்காப்பியனார் மெய்ப்பாட்டியலினிறுதியிற் கூறுதலா னும், சுவைக்கப்படுபொருளை அறிதற்குக்கருவி சுவைப்போ னுடைய ஐம்பொறியென்பது தொல்காப்பியர் பொருளும் சுவையு மாகப் பகுத்துக்கூறலானும்,

"பொறியுணர் வொடும்ஒரு பொருளினை எதிர்ந்த
நெறியுடை மனத்து நிகழ்தரு பான்மை
அயலவ ருறப்புறத் தாப்பொரு ளேட்டின்
இயல்வது சுவையென் றியம்பினர் புலவர்."

என்னும் மாறனலங்கார சூத்திரத்தானும் அறிந்துகொள்க.

சுவைக்கப்படுபொருள்களை ஐம்பொறிகளாலுணர்ந்து சுவைக்குமாற்றிற் குதாரணம் வருமாறு:—

இவள் மேனி அணைபோலும்; இது பரிசத்தாலறிந்து சுவைத்தது. இக்கனி அமிழ்தம்போலும்; இது நாவாலுணர்ந்து சுவைத்தது. இவள் மேனி மாந்தளிர்போலும்; இது கண்ணாலுணர்ந்து சுவைத்தது. இவள் கூந்தல் பூப்போலும் நாற்றமுடையது; இது மூக்காலுணர்ந்து சுவைத்தது. இவள் மொழி யாழிசைபோலும் இனிமையுடையது; இது செவியாலுணர்ந்து சுவைத்தது.

புறத்துநிகழும் மெய்ப்பாட்டையுணருங் கருவிக் குதாரணம் பின்னர்க் காட்டுதும்.

இனித் தண்டியலங்காரசாரநூலார், 'மெய்ப்பாடாவது, (ஒரு பொருளை) நோக்கக்கண்டதுபோலத்தோன்றுங் கருத்து' என்றும், 'இவை நாட்டியத்திலும் காப்பியத்திலும் செய்கைத்திறத்தினாலும் சொற்றிறத்தினாலும் தூண்டப்பட்ட வாசனையின் திண்மையால் தம் மனைவியேபோல அநுபவநிலையில்வந்து ஆநந்தமாகவே நிற்பன' என்றும் கூறுவர்.

செய்கைத்திறம் என்றது அவிநயத்தை. அவிநயம் எட்டுச் சுவையோடுங்கூடலானே எட்டுவகையாம். அவற்றுள் வீரச்சுவை யவிநயமாவது:—

"வீரச்சுவை யவிநயம் விளம்புங் காலை
முரிந்த புருவமுஞ் சிவந்த கண்ணும்
பிடித்த வாளுங் கடித்த வெயிறும்
மடித்த வுதடுஞ் சுருட்டிய நுதலும்
திண்ணென வுற்ற சொல்லும் பகைவரை
யெண்ணல் செல்லா விகழ்ச்சியும் பிறவும்
நண்ணு மென்ப நன்குணர்ந் தோரே"

என்பதாம்.

ஏனைச்சுவைக்குரிய அவிநயங்களையும் சிலப்பதிகாரம் அரங் கேற்றுகாதை நோக்கி அறிக. இவ்வபிநயத்தைப்பற்றிக் கம்பரும் ஒரு செய்யுளிற் கூறியுள்ளார். அது,

"கூற்றுறழ் நயனங்கள் சிவப்பக் கூனுத
லேற்றிவா ளெயிறுக ளதுக்கி யின்றளிர்
மாற்றருங் கரதல மறிக்கு மாதொரு
சீற்றமா மபிநயந் தெரிக்கின் றாரினே." (கம்பரா-பால-உண்-உரு)

என்பது. மாது மறிக்கும் என இயைக்க. இன் உவமவுருபு.

மேற்காட்டிய வீரமுதலிய சுவைகட்குரிய மெய்ப்பாடுகள் காப்பியச்செய்யுள்களிற் புலவனுடைய சொற்றிறத்தினாலும் அறியப்படும்.

சொற்றிறமாவது: வன்சொல் மென்சொல் முதலியன. அவ்வச் சுவைக்கேற்ப வன்மையும் மென்மையுமான சொற்கள் தொடர்ந் திருப்பதே சுவைக்குக் காரணமாம்.

சிருங்காரம் (உவகை), கருணை (அழுகை), சாந்தம் (சமநிலை): இவை மூன்றும் மென்மையான சுவை. ரவுத்திரம் (கோபம்), பீபற்சம் (இளிவரல்), வீரம்: இவை மூன்றும் வன்மையான சுவை. ஆசியம் (நகை), பயானகம் (அச்சம்), அற்புதம் (அதிசயம்): இவை மூன்றும் நடுநிலைச்சுவை என்பது ஒருசாரார் பாகுபாடு.

சிருங்காரமும் (உவகையும்), கருணையும் (அழுகையும்) மிகு மென்மை. ரவுத்திரமும் (கோபமும்), பீபற்சமும் (இளிவரலும்) மிகுவன்மை. ஆசியமும் (நகையும்), சாந்தமும் (சமநிலையும்), அற்புதமும் (வியப்பும்) சற்றுமென்மை. வீரமும், பயானகமும் (அச்சமும்) சற்றுவன்மை என்பது ஒருசாரார் பாகுபாடு.

இவைகளெல்லாம் அவ்வச்சுவைக்கேற்ற வன்மை மென்மை இடைமைச் சொற்களாலே ஆக்கப்படும் என்க. மென்மைக்கும் வன்மைக்கும் உதாரணம் வருமாறு:—

"கன்று குணிலாக் கனியுகுத்த மாயவன்
இன்றுநம் மானுள் வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ"

"பாம்பு கயிற்க் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் மானுள் வருமே லவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ"

"கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
எல்லைநம் மானுள் வருமே லவன்வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ"

இது சிருங்காரம் (உவகை). மென்மை.

"இடித்து ரப்பி வந்து போரெ திர்த்தி யேல டர்ப்பனென்
றடித்த லங்கள் கொட்டி வாய்ம டித்த டுத்த லங்குதோள்
புடைத்து நின்று ஊத்த பூசல் புக்க தென்ப மிக்கிடங்
துடிப்ப வங்கு றங்கு வாலி திண்செ வித்தொ ளைக்கணே"

இது ரவுத்திரம் (கோபம்). வன்மை.

இனி வடநூலார் சுவைக்குக்காரணமான பொருள்களை விபாவமென்றும், அச்சுவையை வெளிப்படுத்துங் காரியங்களை (குறிப்புக்களை) அநுபாவமென்றும், சுவைக்குத்துணையாய், அவற்றை நிறைவுபடுத்தி நிற்பனவற்றைச் சஞ்சாரிபாவம் (பொதுமெய்ப்பாடு) என்றும், சுவையை ஸ்தாயிபாவமென்றும், சுவையானே உண்டாகிச் சுவையைப் புறத்தார்க்கு வெளிப்படுத்துவனவற்றைச் சாத்துவிக பாவமென்றும் கூறுவர். எனவே, விபாவங்களால் (பொருள்களால்)தோன்றி, அநுபாவங்களால் (குறிப்புக்களால்) வெளிப்பட்டுச் சஞ்சாரிபாவங்களால் (பொதுமெய்ப்பாடுகளால்) புஷ்டியடைந்து நிற்கும் ஸ்தாயிபாவம் சுவை(ரஸம்) எனப்படும்.

இனி, மெய்ப்பாடுகள் எட்டாவன:—நகை, அழுகை, இழிவு, வியப்பு, அச்சம், வீரம், வெகுளி, உவகை யென்பன. சமநிலைகூட்டி ஒன்பதென்ப.

இவற்றுள் நகைச்சுவை தோன்றற்குக் காரணமான பொருள்களாவன: இகழ்ச்சி, இளமை, அறிவின்மை, மடமை என்பன. இவை காரணமாக நகைதோன்றும். இவற்றுக்கு உதாரணங்களைப் பேராசிரியருரைநோக்கி அறிக.

இனி இச்சுவை எளிதின்விளங்கச்சில உதாரணங் காட்டுதும். இவ்வாறே மேலுங் கொள்க.

"வானுற நிமிர்ந்த கோபுரத்து வாயிலிற்
கூனருங் குறளருந் தலைநிமிர்ந்துமேற்
கூனலாக் கண்கொடு நோக்கிக் கூனியே
போனது கண்டுளார் முறுவல் பூத்தனர்"

இதில், கூனரும் குறளரும் கோபுரவாயில், தலைமேல்முட்டுமோ என்று அஞ்சி அதனை நிமிர்ந்துபார்த்துக் குனிந்துசென்றமையைக் கண்டு அங்குள்ளார் எள்ளிச் சிரித்தமையின் இது இகழ்ச்சி பற்றிவந்த நகையாயிற்று.

"நிருதர்தம் மருளும் பெற்றே னின்னலம் பெற்றே னின்னோ
டொருவருஞ் செல்வத் தியாண்டு முறையவும் பெற்றே னென்றோ
திருநகர் தீர்ந்த பின்னர்ச் செய்தவம் பயந்த தென்னா
வரிசிலை வடித்த தோளான் வாளெயி றிலங்க நக்கான்"

இது சூர்ப்பநகைகூறிய வார்த்தையை இராமன் எள்ளி நகையாடலின் எள்ளல்பற்றிவந்த நகையாயிற்று.

இனி அழுகைக்குக்காரணமான பொருள்களாவன: இகழ்ச்சி, இழத்தல், நிலைமைவேறுபடல், வறுமை என்பன. இவ்வகாரணமாக அழுகைதோன்றும். உதாரணம்:—

"மைந்தவோ வென்றன் மதகளிறோ வல்வினையேன்
சிந்தையோ சிந்தை தெவிட்டாத தெள்ளமுதோ
தந்தையோ தந்தைக்குத் தந்தையிலான் கொன்றனனோ
வெந்தையோ நின்னை யிதற்கோ வளர்த்தனனே"

இது, மைந்தனை இழந்தமைபற்றி அவலமுற்றமையின், இழவுபற்றிவந்த அழுகைச்சுவையாயிற்று.

"உரனெரிந்து விழவென்னை யுதைத்துருட்டி மூக்கரிந்த
நரனிருந்து தோள்பார்க்க நானிருந்து புலம்புவதோ
கரனிருந்த வனமன்றோ விவைபடவுங் கடவேனோ
அரனிருந்த மலையெடுத்த வண்ணாவோ அண்ணாவோ"

இது, தன்னுறுப்பையிழந்தமைபற்றிவந்த அழுகை.

இனி, இளிவரற்சுவைக்குரிய பொருள்களாவன: மூப்பும், பிணியும், வருத்தமும், மென்மையுமாம். இவைகாரணமாக இளிவரல் பிறக்கும். இளிவரலெனினும் இழித்தலெனினும் அருவருப்பு எனினும் ஒக்கும். உதாரணம்:—

"புரையுறு புன்றொழி லரக்கர் புண்பொழி
திரையுறு குருதியா றீர்ப்பச் செல்வன
வரையுறு பிணப்பெரும் பிறக்க மண்டிய
கரையுறு கடன்முகங் கடுப்பக் காண்டியால்"

இது, 'உதிரவாறீர்ப்பச்செல்லும் பிணப்பெருங்குன்றத்தைக் காண முகங்கடுக்கும்' என்றதனால் அருவருப்புத்தோன்றலின், இளிவரற்சுவையாயிற்று. இது, "மூப்பே பிணியே" (தொ-மர) எனவருஞ் சூத்திரத்து "யாப்பு" என்ற இலேசினாற் கொள்ளப் பட்டது. பிணியு ளடக்கலுமாம்.

"காசொடு முடியும் பூணுங் கரியதாங் கனகம் போன்றும்
தூசொடு மணியு மூன்றா றேறரு தோற்றம் போன்று
மாசொடு கருகி மேனி வனப்பழிந் திடவூர் வந்தான்
சீசீயென் றியாரு மெள்ளத் திகைப்பொடு பழுவஞ் சேர்ந்தான்"

இதுவுமது.

வியப்புக்குக்காரணமான பொருள்களாவன: புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கம் என்பன. இவைகாரணமாக வியப்புத் தோன்றும். உதாரணம்:—

"புகைகொண் டியலும் புதியசக டேறி
நகைகொண்டு நண்பை விளிக்கத்—தொகைகொண்ட
காவதத்துத் தம்மூர்க் கடைகண்டு மாந்தர்செயற்
காவதற்றுக் கண்பரந்தா ராங்கு"

புகைவண்டியிலேறி அடுத்தவண்டியிலிருக்கும் தமது நண்பரைக் கூப்பிடுவதற்குள் தம்மூரிடம் வண்டிசேரக்கண்டு ஒரு செய்கையுந் தோன்றாமல் வியப்பால் கண்பரந்துநின்றார்கள் என்பது இதன்கருத்து. இது புதுமைபற்றிவந்த வியப்புச்சுவை.

"பண்புற நெடிது நோக்கிப் படைக்குநர் சிறுமை யல்லால்
எண்பிறங் கழகிற் செல்லை யில்லையா மென்று நின்ருள்
கண்பிற பொருளிற் செல்லா கருத்தெனி னஃதே கண்ட
பெண்பிறந் தேனுக் கென்று மென்படும் பிறருக் கென்ருள்"

இதுவுமது.

மேற்கூறிவந்த மெய்ப்பாடுகள் நான்கும் தன்கண்தோன்றும் பொருள்காரணமாகவும், பிறபொருள்காரணமாகவும் தோன்றுவன வாம். மேல்வருவனவற்றின் தோற்றம் ஆங்காங்குக் கூறுதும்.

அச்சச்சுவைக்குக்காரணமான பொருள்களாவன: தெய்வமும், விலங்கும், கள்வரும், இறைவரும் என்பன. இவைகாரணமாக அச்சம் பிறக்கும். இம்மெய்ப்பாடு பிறபொருள்பற்றியே வரு மென்க. உதாரணம்:—

"மண்டி யோடினர் சிலர்நெடுங் கடகரி வயிற்றிற்
புண்டி றந்தமா முழையிடை வாளொடும் புகுவார்
தொண்டை நீங்கிய கவந்தத்தைத் துணைவநீ யெம்மைக்
கண்டி லேமென்று புகலெனக் கைதலைக் கொள்வார்"

இது பகையரசரும் இறையுள் அடங்கலின் இறைபற்றிவந்த அச்சமாகும்.

"ஆரிடைப் புகுது நாமென் றமரர்கள் கமலத் தோன்றன்
பேருடை யண்ட கோளம் பிளந்ததென் றேங்கி நைந்தார்
பாரிடை யுற்ற தன்மை பகர்வதென் பாரைத் தாங்கி
வேரெனக் கிடந்த நாக மிடியென வெருவிற் றன்றே"

இது அணங்குபற்றிவந்த அச்சம். அணங்கு - வருத்தம்.

இனி, வீரச்சுவைக்குக்காரணமான பொருள்களாவன: கல்வி யும் தறுகண்மையும் (அஞ்சாமையும்) புகழும் கொடையும் என்பன. இவைபற்றி வீரம் பிறக்கும். உதாரணம்:—

"அங்கிறைவ னப்பரிசு ரைப்பவது கேளாக்
கொங்குறை நறைக்குல மலர்ச்செனி குஹுக்கா
எங்குறைவ தித்தொழிலி யற்றுபவ னென்ருன்
சங்குறை கரத்தொரு தனிச்சிலை தரித்தான்"

இது தறுகண்மைபற்றிவந்த வீரமாதலின் வீரச்சுவை யாயிற்று,

"முடியவிம் மொழியெலா மொழிந்து மந்திரி
கொடியனென் றுரைத்தசொ லொன்றுங் கொண்டில
னடியொரு மூன்றுநீ யளந்து கொள்கென
நெடியவன் குறியகை நீரி னீட்டினன்"

இது கொடைவீரம்.

இனி, வெகுளிச்சுவைக்குரிய பொருள்களாவன: தன் உறுப்பைச் சிதைத்தலும், தன்குடிக்குக் கேடுசூழ்தலும், தன்னறிவையும் புகழையும் கொன்றுரைத்தலும், தன்னை அலைவுசெய்தலும் என்பன. இவை காரணமாக வெகுளிச்சுவை பிறக்கும். பிற பொருள்பற்றிவரும். உதாரணம்:—

"உருத்துமு கிற்குல முட்குடன் மட்கச்
சிரித்திதழ் கவ்விமெ யிற்றிணை தின்றுங்
கரித்துவ சன்றனை நோக்கிய ரக்கன்
கருத்துட னின்றிவை கட்டுரை செய்வான்"

இது வீமனைநோக்கி அரக்கன்கூறியது. இது கொலைபற்றி வந்த வெகுளியாதலின் வெகுளிச்சுவையாயிற்று.

"என்றனனென் றலுமுனிவோ டெழுந்தனன்மண்
படைத்தமுனி யிறுதிக் கால
மன்றெனவா மெனவிமையோ ரயிர்த்தனர்மேல்
வெயில்காந்த தங்கு மிங்கு
நின்றனவுந் திரிந்தனமீ நிவந்தகொழுங்
கடைப்புருவ நெற்றி முற்றச்
சென்றனவந் ததுநகையுஞ் சிவந்தனகண்
ணிருண்டனபோய்த் திசைக ளெல்லாம்"

இதுவுமது.

இனி, உவகைச்சுவைக்குரிய பொருள்களாவன: செல்வ நுகர்ச்சியும், அறிவுடைமையும், புணர்ச்சியும், விளையாட்டும் என்பன. இவைபற்றி உவகை பிறக்கும். இவை தன்கண்தோன்றும் பொருள்பற்றிவரும். உதாரணம்:—

"ஓவியத் துறைகை போய வொருவனை யுருவின் மிக்க
காவலன் ஒருவன் மற்றோர் கன்னிநீ தீட்டு கென்னத்
தாவரு மெழிலிற் கோட்டத் தானுமங் களனு மாக
மேவர வினிது நோக்கி மெய்ம்மயிர் பொடிக்கு மன்றே"

இது காதல்பற்றிவந்த உவகைச்சுவை. இதுவும் புணர்ச்சியு ளடங்கும்.

மெய்ப்பாடுகளை அகமெய்ப்பாடு என்றும், புறமெய்ப்பாடு என்றும் வீரசோழியகாரர் பிரிப்பர். அவர் பிரித்ததுபோலத் தொல்காப்பியர்கூறிய மெய்ப்பாடுகளுள் அகத்தேநிகழ்ந்து புற மெய்ப்பாடுகளுக்குத் துணையாய்நிற்குமிடத்து, "உடைமையின் புறல்" முதலிய முப்பத்திரண்டு மெய்ப்பாடுகளையும் அகமெய்ப் பாடு என்றும், ஏனையவற்றைப் புறமெய்ப்பாடு என்றும் யாமும் பிரித்துக்கூறலாம். அகமெய்ப்பாடு எனப் பிரிக்கப்பட்டவையும் தனிமெய்ப்பாடுகளாகப் புறத்தேதோன்றுமாயின் புறமெய்ப்பாடு எனலாம். இளம்பூரணரும் "உடைமையின்புறல்" என்னுஞ் சூத் திரவுரையுள் "இம்முப்பத்திரண்டும், மேற்கூறிய முப்பத்திரண்டும் நிகழாவிடத்துநிகழும் எனவும், அவைநிகழுமிடத்து இவை அவற் றிற்கு அங்கமாக (துணையாக) நிகழும் எனவும்" கூறுவர்.

வடநூலார், 'நிர்வேதை' முதலாக முப்பத்துமூன்று மெய்ப் பாடுகள் கூறுவர் என்றும், அவற்றைச் சஞ்சாரிபாவம் (பொது மெய்ப்பாடு) என்றும், இவை எண்வகைமெய்ப்பாட்டிற்கும் வலி கொடுத்துநிற்பன என்றும் தண்டியலங்காரசாரநூலார் கூறியுள் ளார். வடநூலார்கூறும் முப்பத்துமூன்று மெய்ப்பாடுகளோடு, தொல்காப்பியர்கூறிய "உடைமையின்புறல்" முதலிய முப்பத் திரண்டுட் பெரும்பாலன ஒத்துவருகின்றன. ஆதலின் இவற்றை யும் பொதுமெய்ப்பாடுகள் என்று கூறல் பொருத்தமாகும்.

இன்னும், தொல்காப்பியர்கூறிய மற்றும் மெய்ப்பாடுகளையும் கூறப்புகின் விரியுமாதலின் அவற்றை இவ்வளவில் விடுத்து, மேற் கூறியபடி புறமெய்ப்பாடுகளைக் கண்ணானும் செவியானும் உணர் தற்கு ஒருதாரணந்தந்து முடிக்குதும்.

"நல்லியன் மகர வீணைத் தேனுக நகையுந் தோடும்
வில்லிட வாளும் வீச வேல்கிடந் தனைய நாட்டத்
தெல்லியன் மதிய மன்ன முகத்திய ரெழிலி தோன்றச்
சொல்லிய பருவ நோக்குந் தோகையி னுடி னரே.

---

ஶ்ரீ:

தா(யா)ராநகபவேந்தன் போஜதேவன் இயற்றிய

# ஸரஸ்வதீகண்டாபரணம்

## (கலைமகள்கழுத்தணி)

[ஶ்ரீ. V. S. ராமஸ்வாமிசாஸ்திரியாரவர்கள்.]

சசO-ஆம்பக்கத் தொடர்ச்சி.

### V. ஔசித்யமாறுபாடு குணமாதற்கு உதாரணம்:—

தெநாய நாயஃ௱௱ஃாஹாரணா தவெ ந
ஸௌஶ்ராவி நாஃ வா௱ஷகுஃஹிவூவ ந்நா ।
ஜஜ்ஞாய தீக்ஷ்ணவிஸ்ஃாஃ ஸஹஸொஜ்ஜ்ஹ ஞீ
வாமஹி-ஷூவ நகாஞஸிமெவ வீ தா ॥

சீதை மெல்லிய இயல்புவாய்ந்தவளாயினும், நாயகனது மிகக் கொடிய தீயசொற்களாகிய வெயிலாற் கடிய இயல்பையுடையளாயினள். சூரியகாந்தக்கற்போல, வெம்மையுடன் விளக்கமிக்க சொற்களாகிய தீச்சுவாலைகளை விரைவில் வெளியிடுவாளாய் ஜ்வலித்தனள்.

இங்குச் சீதைக்குக் கூறப்பட்ட இயல்புகள் பெண்மைக்கு ஏலாதனவாயினும், இராமனால் வசையுரைக்கப்பட்ட இச்சந்தர்ப்பத்தில் அவளை இவ்வியல்பையடைந்தவளாகக் கூறுதல் பொருந்துவதேயாம்.

### VI. வசனமாறுபாடு குணமாதற்கு உதாரணம்:—

வாஃாாாஹியாஷொ ஒஃ கயஃாய-ஸ்யூ ய௱ஜ்யுதெ ।
விபாஜி தாமம் தஸ்யாஃ கஃா ந௱ ரஃ நஹ்ஃடு ॥

நற்குடியிற்பிறந்தோனாகிய எனக்குப் பிறன்மனைநயத்தலென்பது எவ்வாறு பொருந்தும்? (பிறன்மனையாளாகிய) அவளது அதரத்தை நான் எப்பொழுது சுவைப்பேன்?

இங்கே ஒருவனுடைய கிளவிகள் முன்னொடுபின் முரணு வனவாயிருப்பினும், இவ்வாறுகூறுதல் கூறுவோனது கலங்கிய நிலைமைக்குப் பொருந்துவதேயாம்.

VII. தருமவிரோதம் குணமாதற்கு உதாரணம்:—

ஸம்ஷா நாம பாண்டவாநாம் பத்நீ பாஞ்சாலக நந்திநீ ।
ஸதீ நாரீகுணீஸ்வாஸீத்தைவோ ஹி விதிரீத்ருஸ: ॥

பாஞ்சாலி பாண்டவரைவருக்கும் மனைவி; ஆயினும், அவள் கற்புடைமடந்தையருள் முதன்மையுடையள்; ஏனெனில் இது தெய்வத்தால் நிகழ்ந்த விதியாகும்.

ஆடவர் பலரை மணந்துவாழ்தல் கற்புடைமைக்கு ஏலா தென்று அறநூல் கூறுமாதலால், திரௌபதி கற்புடையளென்றல் அந்நூலொடு மாறுபடுவதாய்த்தோன்றினும், அது தெய்வத்தால் நிகழ்ந்ததென்று கவியே கூறிவைத்தமையால் அம்மாறுபாடு குற்ற மாகாது குணமேயாம்.

VIII. பொருணூன்மாறுபாடு குணமாதற்கு உதாரணம்:—

நீதிராவதி யத்ருஷ்ய: ஸாஸ்த்ரநாநிநோ ஹியே ।
விபத்விஷ்யாத்ம ஹஸ்ரவ ஸத்ருத்வஸ்ஸ்வ்யாஸ்தவாயஸ: ॥

பகைவன் ஆபத்தடைந்துள்ளபோதே படையெடுத்து அடர்க் கத்தக்கவனுவான் என்பது நீதிநூற்கருத்தாகும். ஆயினும், அவ் வாறுசெய்தல் மானமுடையானுக்கு வெட்கத்தைத் தருவதாம். அடர்த்தற்கண் இராகுவுக்குக் களிப்பையுண்டாக்கும் நிறை மதிபோல, மானமுடையோனுக்கு வலியுற்றுநிற்கும் தலைவனே அடர்த்தற்கண் மகிழ்ச்சியைத் தருபவனுவான்.

இங்கே பொருணூலோடு மாறுபாடு காணப்படினும், இது பொருளேகருதுவோன் கூறுவதன்றி, மானமேகருதுவோன் கூற்றாதலால் அவன் இவ்வாறுகூறுதலே தகுதியாதலின் இது குற்றமாகாது, குணமேயாம்.

IX. காமநூன்மாறுபாடு குணமாதற்கு உதாரணம்:—

தோலாதிப்ரேரணத்ரஸ்தவதூஜநமுகோத்கத: ।
காமிநாம் லயவேஷாஹ்லாதேயம் ராகவிவர்த்தந: ॥

ஊசலை மிகுவேகமாக இயக்குவதனல் அஞ்சிய மடந்தையரின் முகத்தினின்றும் தோன்றிய பாட்டுக்கள், தாளஅறுதிக்கு ஒவ்வாதிருப்பினும், காதலருக்குக் காமத்தை வளர்ப்பனவாம்.

காமநூல்கூறுமாற்ருல் தாளந்தவறிய பாடல் சுவையின்றியொழியுமாயினும், காதலால் காதலருக்கு அவை இனியவாய் ஆசையை வளர்ப்பன: என்றமையின் இது குற்றமின்றிக் குணமாயிற்று.

உக்தம் குணாஶ்ச தோஷாஶ்ச காவ்யே தோஷகுணாஶ்ச யே ।
ஶ்ரவ்யா தாப்யோ ஹி ஸாரம் ஸம்ப்ரத்யலங்காராநு ப்ரவக்ஷ்யதே ॥ ॥

இவ்வாற்ருல், காவியங்களுக்குரிய குணங்களும், குற்றங்களும், குற்றமாயிருந்தும் குணமெனக்கொள்ளப்படும் தோஷகுணங்களும் நிரூபிக்கப்பட்டன. இனி அலங்காரங்களைக் கூறுவாம்.

[குற்றங்களை எடுத்து விரித்ததே போதுமே. குணங்களைப்பற்றிக்கூறுதலாற் பயன் என்? அவற்றை விரிப்பானேன்? என்னும் ஆசங்கைக்கு உத்தரம் வருமாறு:—]

யுவதேரிவ ரூபமங்க காவ்யம்
ஸ்வததே ஶுத்தகுணம் ததப்யதீவ ।
விஹிதப்ரணயம் நிரந்தராபி:
ஸதலங்காரவிகல்பகல்பநாபி: ॥ ௧௫௮ ॥

குற்றமற்றுக் குணமுடையதாயிருக்கும் யுவதியின் வடிவம் போலக் குற்றமற்றுக் குணமுடையதாயுள்ள காவியம் இனிமைபயப்பதாம். அஃதும் இடைவிடாதுநிறைந்த நல்ல அணிவகைகளோடு கூடியிருப்பின் மிகவும் இனிமைபயப்பதாம்.

யதி³ ப⁴வதி வசஶ்ச்யுதம் கு³ணேப்⁴யோ
வபுரிவ யௌவனவந்த்⁴யமங்க³னாயா꞉ ।
அபி ஜனத³யிதானி து³ர்ப⁴க³த்வம்
நியதமலங்கரணானி ஸம்ஶ்ரயந்தே ॥ கடுகூ ॥

யௌவனப்பருவமின்றியொழிந்த மகளிர்யாக்கைபோலக் காவியம் குணமின்றியொழியின் அதன்கண் அமைக்கப்பெறும் அணிகள் மிக நல்லனவேயாயினும் அவ்வணிகள் இனிமைபயத்த லின்றியொழியும்.

என்னை ?

தீ³ர்கா⁴பாங்க³ம் நயனயுக³லம் பூ⁴ஷயத்யஞ்ஜனஶ்ரீ
ஸ்துங்கா³போ⁴கௌ³ ப்ரப⁴வதி குசாவர்சிதும் ஹாரயஷ்டி꞉ ।
மத்⁴யே க்ஷாமே வஹதி வலிப⁴ங்கோ³ ஸ்தனகவல்லீ ஸமுக்ஷீ꞉
ஶ்ரோணீபி³ம்பே³ க³ரிணி ரஶனாதா³ம ஶோபா⁴ம் பி³ப⁴ர்தி ॥ ॥

மகளிருடைய நீண்டகடைகளையுடைய கண்களையே மையின் அழகு பொலிவுறச்செய்கின்றது. உயரிய தனங்களையே ஆரம் அலங்கரிக்கவல்லது. இடைசிறுத்த யாக்கையையே கச்சுப் பொலிவுறுத்துகின்றது. மிகக் கனவிய நிதம்பங்களிலே மேகலை பொலிவுற்று விளங்குகின்றது.

ஸரஸ்வதீகண்டாபரணத்தில்

குணவிவேசனம் என்னும் முதற்பரிச்சேதம்

முற்றிற்று.

---

# ஆங்கிலகலாசாலைத் தமிழ்ப்பரீக்ஷைத் தேர்ச்சிக்குறிப்பு.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தார் 1941-ஆம்ஹூ மார்ச்சுமீ 1௨ நடத்திய ஆங்கிலகலாசாலைத் தமிழ்ப்பரீக்ஷைகளில் தேறிப் பரிசும், யோக்கியதாபத்திரமும் பெறும் மாணுக்கர்களின் அபிதானபத்திரம்.

## பி. ஏ. பரீக்ஷை.

### 2-வதுவகுப்பு.

| தொடர் எண். | ரிஜிஸ்டர் எண். | |
|---|---|---|
| 1 | 62 | C N பொன்னம்பலம், ஸெண்ட்ஸேவியர் காலேஜ், பாளையங்கோட்டை. |
| 2 | 59 | S அப்துஷ்ஷகூர், ஷை ஷை |
| 3 | 61 | E S பிரான்ஸிஸ், ஷை ஷை |
| 4 | 57 | M S கோபால், ஷை ஷை |
| 5 | 40 | S பொன்னுசாமி, ஸெண்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி. |
| 6 | 19 | T வெங்கடராமன், ஷை ஷை |
| 7 | 25 | V P இராமசாமி, ஷை ஷை |
| 8 | 37 | A மயிலேறும் பெருமாள், ஷை ஷை |
| 9 | 38 | T S ஸ்ரீனிவாஸன், ஷை ஷை |
| 10 | 58 | S குழந்தைசாமி, ஸெண்ட்ஸேவியர் காலேஜ், பாளையங்கோட்டை. |
| 11 | 48 | ந. பா. அப்துல் ஜப்பார், பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை. |
| 12 | 26 | K செங்கோடன், ஸெண்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி. |
| 13 | 30 | N வாசுதேவன், ஷை ஷை |
| 14 | 42 | N M இராமனுதன், ஷை ஷை |

## எப். ஏ. பரீக்ஷை.

1-வதுவகுப்பு.

1 74 R ரெங்கராஜன், மதுரைக்காலேஜ், மதுரை.

(முதற்பரிசு ரூபா 40 பெறத்தக்க தங்கப்பதக்கம்.)

2 253 M மனுவேல், ஸெண்ட்ஸேவியர் காலேஜ், பாளையங்கோட்டை. (இரண்டாவதுபரிசு ரூபா 35.)

3 108 G சேவு, ஸெண்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி.

(மூன்றவதுபரிசு ரூபா 30)

4 139 P கதிர்வேலு, கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம்புத்தூர்.

(நான்காவதுபரிசு ரூபா 25.)

5 107 S ரெங்கராஜலு, ஸெண்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி.

(ஐந்தாவதுபரிசு ரூபா 20.)

6 226 K B ஜெயராமன், பச்சையப்பா காலேஜ், சேத்துப்பட்டு, சென்னை.

7 106 K சதாசிவன், ஸெண்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி.

8 231 V சபாபதி, கவர்ன்மெண்ட் மகமடன் காலேஜ், சென்னை.

9 120 C பாஷ்யம், ஸெண்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி.

10 150 A பொன்னம்மாள் (பெண்), கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம்புத்தூர்.

11 184 T C தியாகராஜன், பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை.

2-வதுவகுப்பு.

1 88 A சுவாமிநாதன், ஸெண்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி.

2 119 S கிருஷ்ணமூர்த்தி, ஷை ஷை

3 144 S V சிவனடியான், கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம்புத்தூர்.

4 245 K மாணிக்கவாசகம், ஸெண்ட்ஸேவியர் காலேஜ், பாளையங்கோட்டை.

| | | |
|---|---|---|
| 5 | 183 | R K தியாகராஜன், பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை. |
| 6 | 81 | N ராஜு, ஸென்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி. |
| 7 | 202 | P தாராபாய் காமத் (பெண்), பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை. |
| 8 | 237 | H அமீர்பாஷா, ஸென்ட்ஸேவியர் காலேஜ், பாளையங் கோட்டை. |
| 9 | 243 | A ரெங்கசாமி, ஷை ஷை |
| 10 | 244 | V சீதாராமன், ஷை ஷை |
| 11 | 137 | G இராமகிருஷ்ணன், கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம் புத்தூர். |
| 12 | 190 | S ரங்கசாமி, பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை. |
| 13 | 197 | R ஸ்ரீமான், ஷை ஷை |
| 14 | 135 | M V அன்னம்மாள் (பெண்), கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம்புத்தூர். |
| 15 | 138 | S இராமமூர்த்தி, ஷை ஷை |
| 16 | 86 | N வேங்கடராமன், ஸென்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி. |
| 17 | 187 | V நடேசன், பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை. |
| 18 | 161 | T நாராயணன், மஹாராஜா காலேஜ், புதுக்கோட்டை. |
| 19 | 186 | S A நடராஜன், பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை. |
| 20 | 155 | P முருகாநந்தகணபதி, கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம் புத்தூர். |
| 21 | 136 | C S A ஆறுமுகம், ஷை ஷை |
| 22 | 214 | N A அகளங்கன், பச்சையப்பா காலேஜ், சேத்துப்பட்டு, சென்னை. |
| 23 | 127 | G கணேசன், ஸென்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி. |
| 24 | 176 | மு. பா. சத்தியமூர்த்தி, பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை. |
| 25 | 121 | S ராஜகோபாலன், ஸென்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி. |
| 26 | 126 | V கோவிந்தராஜன், ஷை ஷை |
| 27 | 210 | S சுவாமிநாதன், பச்சையப்பா காலேஜ், சேத்துப்பட்டு, சென்னை. |

| | | |
|---|---|---|
| 28 | 129 | N சுப்பிரம்மணியன், ஸெண்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி. |
| 29 | 134 | C S அய்யாசாமி, கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம்புத்தூர். |
| 30 | 211 | N சண்முகசுந்தரம், பச்சையப்பா காலேஜ், சேத்துப்பட்டு, சென்னை. |
| 31 | 97 | A இருதயசாமி, ஸெண்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி. |
| 32 | 143 | V சுந்தரம், கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம்புத்தூர். |
| 33 | 145 | G தேவிரம்மாள் (பெண்), ஷை ஷை |
| 34 | 172 | V S கிருஷ்ணமூர்த்தி, பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை. |
| 35 | 189 | D பூபதி, ஷை ஷை |
| 36 | 224 | V இராமசுவாமி, பச்சையப்பா காலேஜ், சேத்துப்பட்டு, சென்னை. |
| 37 | 233 | A R கிருட்டினசாமி, ஸெண்ட்ஸேவியர் காலேஜ், பாளையங்கோட்டை. |
| 38 | 75 | V செல்லராசு, மதுரைக் காலேஜ், மதுரை. |
| 39 | 151 | C R மகாதேவன், கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம்புத்தூர். |
| 40 | 159 | V ராமச்சந்திரன், ஷை ஷை |
| 41 | 198 | V தக்ஷிணாமூர்த்தி, பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை. |
| 42 | 228 | S N சாகுல்கமீது, கவர்ன்மெண்ட் மகமடன் காலேஜ், சென்னை. |
| 43 | 84 | M S பாக்கியம், ஸெண்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி. |
| 44 | 109 | S மகாகணபதி, ஷை ஷை |
| 45 | 191 | S A A ராமய்யா, பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை. |
| 46 | 209 | M S ஜானகிராமன், ஷை ஷை |
| 47 | 252 | S கிருஷ்ணன், ஸெண்ட்ஸேவியர் காலேஜ், பாளையங்கோட்டை. |
| 48 | 256 | S சுப்பையா, ஸெண்ட்ஜான் காலேஜ், பாளையங்கோட்டை. |
| 49 | 174 | M கோபாலகிருஷ்ணன், பிரஸிடென்ஸிகாலேஜ், சென்னை. |
| 50 | 235 | S மரியமிக்கேல், ஸெண்ட்ஸேவியர் காலேஜ், பாளையங்கோட்டை. |

| | | |
|---|---|---|
| 51 | 111 | V முத்துசாமி, ஸெண்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி. |
| 52 | 114 | S முத்துகிருஷ்ணன், ஷை ஷை |
| 53 | 192 | N R ருக்மாங்கதன், பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை. |
| 54 | 194 | B வெங்கடசாமி, ஷை ஷை |
| 55 | 221 | P S சேஷாத்திரி, பச்சையப்பா காலேஜ், சேத்துப்பட்டு, சென்னை. |
| 56 | 232 | T S கண்ணன், லயோலா காலேஜ், சென்னை. |
| 57 | 102 | P சவரிராஜ், ஸெண்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி. |
| 58 | 238 | G நாராயணன், ஸெண்ட்ஸேவியர் காலேஜ், பாளையங்கோட்டை. |
| 59 | 89 | S பழநியப்பன், ஸெண்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி. |
| 60 | 140 | M கிருஷ்ணன், கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம்புத்தூர். |
| 61 | 201 | என் சரஸ்வதி (பெண்), பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை. |
| 62 | 208 | R நடராஜலு, ஷை ஷை |
| 63 | 117 | B நடராஜன், ஸெண்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி. |
| 64 | 182 | M A திருமாலாச்சாரி, பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை. |
| 65 | 200 | P அமலோற்பவமரி (பெண்), ஷை ஷை |
| 66 | 204 | T N விஜயலட்சுமி (பெண்), ஷை ஷை |
| 67 | 205 | K S சுப்பிரமணியம், ஷை ஷை |
| 68 | 110 | S கிருஷ்ணன், ஸெண்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி. |
| 69 | 181 | A தாஹர்ஷரிப், பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை. |
| 70 | 196 | T V வெங்கடரமணராவ், ஷை ஷை |
| 71 | 87 | V முத்தளகப்பன், ஸெண்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி. |
| 72 | 94 | M முத்துமுதலி, ஷை ஷை |
| 73 | 104 | M நடராஜன், ஷை ஷை |
| 74 | 118 | T முத்துவீரசிகாமணி, ஷை ஷை |
| 75 | 131 | K P கந்தசாமி, ஷை ஷை |
| 76 | 133 | S முத்தையா, ஸெண்ட்ஜான் காலேஜ், பாளையங்கோட்டை. |
| 77 | 147 | T N நாகராஜன், கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம்புத்தூர். |

78 165 V வீரராகவன், பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை.

79 207 V S கிருஷ்ணசாமி, ஷை ஷை

80 225 N M நரசிம்மன், பச்சையப்பா காலேஜ், சேத்துப்பட்டு, சென்னை.

81 158 V வேணுகோபால், கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம்புத்தூர்.

82 215 G செல்வராஜன், பச்சையப்பா காலேஜ், சேத்துப்பட்டு, சென்னை.

83 85 A சுப்பையா, ஸென்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி.

84 199 R நடராஜன், பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை.

85 222 T T ரங்கசாமி, பச்சையப்பா காலேஜ், சேத்துப்பட்டு, சென்னை.

86 91 பழ. வயித்திநாதன், ஸென்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி.

87 160 M ரோசம்மாள் (பெண்), கவர்ண்மெண்ட் காலேஜ், கோயம்புத்தூர்.

88 179 W சார்லஸ் சாமுவேல், பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை.

89 234 M ரஷீது அகமது, ஸென்ட்ஸேவியர் காலேஜ், பாளையங்கோட்டை.

90 128 D நடேசன், ஸென்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி.

91 100 O N சுந்தரம், ஷை ஷை

92 113 L நடனசபாபதி, ஷை ஷை

93 156 B வீரையன், கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம்புத்தூர்.

94 220 N வெங்கடேசன், பச்சையப்பா காலேஜ், சேத்துப்பட்டு, சென்னை.

95 79 K கணேசன், ஸென்ட்ஜோஸப் காலேஜ், திருச்சி.

96 92 P தேவராஜ், ஷை ஷை

97 101 M சிவகடாக்ஷம், ஷை ஷை

98 163 P L இலக்குமணன், மஹாராஜா காலேஜ், புதுக்கோட்டை.

99 175 T S கோவிந்தன், பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை.

100 236 S மவுதுங்கனி, ஸென்ட்ஸேவியர் காலேஜ், பாளையங்கோட்டை.

101 203 மேரி டேவிட், பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை.

